18

# காட்டுச் சாப்பாடு

**து**ர்கா பிரசாதுக்குத் தான் ஏற்கனவே இறந்துவிட்டது போல் இருந்தது. இறந்து ஒரு வாரமாகியிருக்க வேண்டும் அல்லது அதற்கும் அதிகமாக. உயிர் இயங்குவதன் அடையாளமே தெரியவில்லை. பாகமதி ஆற்றின் படிக்கட்டுகளில் உடல் அமர்ந்திருக்கிறது, பிடித்து வைத்த மண்பாண்டம் போல. பசுபதிநாதர் ஆலயத்தில் தன்னிச்சையாக அமர்ந்திருக்கும் அவருக்குப் பரிச்சயமான பசுக்கள் கூட அது வெறும் ஜடம் என்று தீர்மானித்துவிட்டது போல வாளாவிருக்கின்றன. உள்ளே இருக்கும் பசுபதிநாதருக்கு என்றுமே குரல் இல்லை. வேடிக்கை பார்ப்பதோடு சரி, பாகமதிக்கு ஜோடியாக.

அதற்காக பாகமதி மீதோ, பசுபதி நாதர் மீதோ கோபப்பட்டு ஒன்றும் லாபமில்லை என்று துர்கா பிரசாதுக்கு இப்போது சர்வநிச்சயமாகிவிட்டது. ஒரு காலத்தில் மகா கோபம் வரும். ஏதோ அவர்கள்தான் கையொப்பமிட்டு, உறுதிமொழி அளித்து அவரது நல்வாழ்வுக்கும் மன நிம்மதிக்கும் தந்த உத்தரவாதத்தை மீறிவிட்டவர்கள் போல. அதிகாலை நேரத்தில் பக்தர்கள் வருவதற்கு முன் தனது ஆத்திரத்தைக் கொட்ட ஓடியிருக்கிறார். தொம் தொம்மென்று பாகமதியைத் துவம்சம் செய்வது போல வேக வேகமாக முங்கி எழும்போது அவரது ஆத்திரம் வெளிப்படும். பாகமதி சிலிர்ப்பாள் அல்லது 'போய்யா நீயும் உன் ஆத்திரமும்' என்று சிரிப்பாள். அதை

அவர் கண்டுகொண்டதில்லை. அதிகாரப் படியின் மேல் இருப்பது பசுபதிநாதர் என்கிற எண்ணத்தில் ஈரவேஷ்டியுடன் கர்ப்பகிருகத்தின் முன்நின்று 'இது உனக்கு அடுக்குமா?' என்பார். வெளிப் பிராகாரத்தில் அமர்ந்திருக்கும் நிரந்தர பசுக்களைத் தவிர பார்வையாளர்கள் எவருமில்லை என்று அவருக்குத் தெரியும். ஆண்டவனுக்கு கர்ப்ப கிருகத்தில் பூஜை செய்ய அருகதையுள்ளவர்களாகக் கருதப்படும் அந்தக் கன்னடம் பேசும் குருக்கள் இல்லாத நேரம் அது என்பது ஒன்றே அவரது சௌகர்யம். பல நூறு ஆண்டுகளாக அந்தக் குருக்கள் வம்சம் அங்கு இருந்தாலும் அவரைப் போலவே சரளமாக நேப்பாள மொழி பேசினாலும் ஆதி சங்கரர் காலமா இது? பூகோள எல்லைகளும் சரித்திரமும் மாறிய பிறகு உணர்வுகள் மாறாமல் எப்படி இருக்கும்? ஆனால் இது ஒரு விசித்திரமான தேசம். மரபுகளை மாற்ற பயப்படும் தேசம். எதை மாற்றினால் பாகமதி பொங்குவாளோ என்று பயம். பசுபதிநாதர் பயங்கர ரூபமெடுப்பாரோ என்று பயம். துர்கா பிரசாதுக்கு பேய்ச் சிரிப்பு சிரிக்க வேண்டும் போல் இருந்தது. பாவம் பசுபதிநாதர். அவரை விட சடங்குகள் முக்கியமாகிப் போனது அவருக்குத் தெரியாது.

படிக்கட்டில் யாரோ இறங்கி வருவது போலத் தோன்றிற்று. துர்கா பிரசாத்தின் தளர்ந்த உடலில் நடுக்கம் ஏற்பட்டது. இப்பொழுதெல்லாம் சின்ன அரவம் கூட பீதியேற்படுத்துகிறது.

சத்கோடா ஜீ!''

துர்கா பிரசாத் சத்கோடா அசையாமல அமர்ந்திருந்தார். உடம்பின் நடுக்கத்தை மறைக்கப் பிரயாசைப்பட்டார். அவர் அமர்ந்திருந்த படிக்கட்டின் கீழ் வந்து அமர்ந்த அவருடன் புரோகிதம் செய்யும் நந்த கிஷோரை அவர் லேசான கலவரத்துடன் பார்த்தார்.

''அரண்மனையிலே உங்களைத் தேடறாங்க'' என்றான் மெல்ல.

அவருக்கு கப்பென்று குரல்வளையை பீதி பற்றிக் கொண்டது.

''நா ஓடி ஒண்ணும் போகல்லியே. இங்கதானே இருக்கேன்?''

''நீங்க அரண்மனையிலேயும் இல்லே. வீட்டிலேயும் இல்லே. இங்கே உக்காந்திருக்கீங்கன்னு யாருக்குத் தெரியும்?''

''வேற எங்கே போக?'' என்றார் துர்கா பிரசாத். ''இரண்டு இடத்திலேயும் பிசாசுங்க துரத்துது.''

நந்த கிஷோர் அவரை உற்றுப் பார்த்து அவரது பேச்சின் அபத்தத்தை உணர்ந்தவன் போல் சிரித்தான்.

''அதெயெல்லாம் விரட்டத்தானே உங்களைப் பொறுக்கியிருக்காங்க!''

துர்கா பிரசாத்தின் உடம்பு நடுங்கிற்று. குழி விழுந்த கண்கள் பீதியில் உறைந்தன.

தலையை வெகு வேகமாக ஆட்டி, ''எனக்கு அதுக்கு சக்தியில்லே நந்த கிஷோர். அதுக்குத் தகுதியில்லேன்னு நா நினைக்கிறதா போய் சொல்லிடு'' என்றார்.

நந்த கிஷோர் அவரை அனுதாபத்துடன் பார்த்தான்.

''உங்களை விடமாட்டாங்க'' என்றான் நிதானமாக. ''அதைத் தடுக்க எனக்கு எந்தவித அதிகாரமும் இல்லேன்னு உங்களுக்குத் தெரியும். எங்கே உங்களைக் கண்டாலும் கையோடு அழைச்சிட்டு வரணும்னு எனக்கு உத்தரவு. அரண்மனை வண்டி வந்திருக்கு. பென்ஸ் வண்டி. நகர்றது தெரியாம மிதக்கும். உக்காந்து பாருங்க.''

அப்படித்தான் அது வந்து நின்றிருக்க வேண்டும் அவருக்குத் தெரியாமல். துர்கா பிரசாத் மிரட்சியுடன் தலையைத் திருப்பிப் பார்த்தார். தொலைவில் தெரிந்தது மகாராஜா பயணித்த வாகனம். கரிய நிறத்தில் பளபளத்தது. வெள்ளைச் சீருடையில் ஓட்டுநர் தென்பட்டார்.

"முடியாது முடியாது. நா வரல்லே. என்னை விட்டுடு. வேற யாரும் கிடைக்கல்லியா?"

"இல்லே" என்றான் நந்த கிஷோர் சோர்வுடன். "மத்தவங்க எல்லாரும் உங்களை விட வயசிலே சின்னவங்க. குடும்பம், வீடு வாசல்னு இருக்கறவங்க."

துர்கா பிரசாதுக்குப் படபடத்துக் கொண்டு வந்தது. "அநாதைப் பொணம்னா தண்டிக்கப்படணுமா?" "உஷ்" என்றான் நந்த கிஷோர் பொறுமையிழந்து. "சத்கோடாஜி! எங்கிட்ட எதையும் பேசி பிரயோஜனமில்லே. அரண்மனையிலே வந்து பேசிக்குங்க. தயவு செய்து என்னோடு வாங்க!"

அவன் அவரது எலும்பு துருத்தும் தோள்பட்டையிரண்டையும் பற்றிக் கைத்தாங்கலாக எழுப்பினான். தூக்கத்தில் நடப்பவர் போல அவனுடன் அவர் நடந்தார். பென்ஸ் காரின் பின்னிருக்கையில் அமர்த்தப்பட்டபோது சப்தநாடியும் நடுங்கிற்று. சொல்லத் தெரியாமல் கண்களில் நீர் நிறைந்து உடம்பு குலுங்கிற்று. காட்மாண்டுவின் பணக்காரர்கள் வாழும் அகண்ட தெருக்களில் கார் மிதந்து அரண்மனை வளாகத்துள் நுழைந்து சற்று தொலைவு சென்று நின்றது. வெறிச்சோடிய வளாகத்தையும் சூன்யம் பிடித்த கூடங்களையும் தாண்டி ஒரு முற்றத்தை அடைந்தார்கள். துர்கா பிரசாதின் கால்கள் பின்னிக் கொண்டு நகர மறுத்தன. முற்றத்தில் அவருடன் வேலை பார்க்கும் மற்ற அரண்மனைப் புரோகிதர்கள் நின்றிருக்க புதிய மன்னர் ஞானேந்திரர் மையமாக அமர்ந்திருந்தார். துர்கா பிரசாதைக் கண்டதும் மன்னர் எழுந்து கைகூப்பியது வழக்கமில்லாதது என்றாலும் அவர் சொன்ன செய்தி நடுக்கத்தை ஏற்படுத்தியது. முடிவெடுத்துவிட்டார்கள். அநாதைப் பிணத்தை பலிபீடத்துக்கு அனுப்ப தீர்மானமாகிவிட்டது. நந்த கிஷோருக்கு மட்டுமல்ல, இனி யாருக்குமே இதை எதிர்க்க அதிகாரமில்லை. ஞானேந்திரரின் முகத்தில் லேசான மலர்ச்சி தென்பட்டது. ஏற்கனவே மனனம் செய்யப்பட்டவை போல சொற்கள் வெளிப்பட்டன.

''துர்கா பிரசாத் சத்கோடாஜி! உங்களுக்கு நான் எப்படி நன்றி சொல்வது என்று தெரியல்லே. தேசம் ஒரு மாபெரும் சோகத்திலே இருக்கு. மக்கள் தெய்வமா நினைச்ச அரசனும் அரசியும் அவங்களுடைய மொத்த குடும்பமும் இன்னும் பல ராஜ குடும்பத்தாரும் மூர்க்கமா கொலையுண்டு போன அதிர்ச்சியிலேந்து மீள முடியல்லே. அப்படிப்பட்ட நிலையிலே நீங்கள், மரபை மறக்கக் கூடாதுன்னு லௌகீக வாழ்க்கையைத் துறந்து மகாராஜா பிரேந்திரருடைய ஆவியாகக் காட்டுக்குப் போக முடிவெடுத்ததை மக்கள் நன்றியுடன் நினைப்பார்கள். மன்னருக்குக் காட்டப்படவேண்டிய மரியாதை உங்களுக்குக் காட்டப்படும்...''

துர்கா பிரசாதுக்கு வெலவெலத்துப் போயிற்று. தொண்டை வறண்டு நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்டது. நீர் கொடுங்கள் என்று சைகை காட்டத் துணிவில்லாமல் கைகள் துவண்டன. சுற்றிலும் நின்றிருந்த புரோகிதர்கள் ஒரு அதீதமான புன்னகையை வீசினார்கள். மிக்க மரியாதையுடன் அவரது காலில் விழுந்து வணங்கினார்கள். ஞானேந்திரர் தனது வேலை முடிந்தது என்பது போல பரிவாரங்கள் சூழ நகர்ந்தார்.

துர்கா பிரசாதுக்கு உண்மையிலேயே பேச்சடைத்துப் போயிற்று. சுற்றி நின்ற புரோகிதர்கள் அவரை மகாராஜாவின் ஆவியாக ஏற்றுக் கொண்டுவிட்டது போல, அவர்கள் அறிந்திருந்த துர்கா பிரசாதுக்கும் அவருக்கும் சம்பந்தமில்லை என்பது போல நடந்துகொண்டார்கள்.

''மன்னர் என்பவர் விஷ்ணுவின் அவதாரம். அவரது ஆவிக்கு எந்தக் குறையும் இருக்கக்கூடாது.''

ராஜோபசாரம் நடந்தது. அவரை இதமான சுடுநீரில் குளிப்பாட்டி புத்தாடைகள் அணிவித்தார்கள். அவரது கண்களில் தாரை தாரையாக வழிந்த நீரைத் துடைத்தபடி, ''உஷ், அழ வேண்டியவர்கள் நாங்கள். நீங்கள் மன்னரின் பிரதிநிதி'' என்று

அடக்கினார்கள். இரவு படுக்குமுன் கொடுக்கப்பட்ட அறுசுவை உண்டி உள்ளே இறங்க வில்லை. பட்டு மெத்தையில் படுத்தும் உறக்கம் கொள்ளவில்லை.

இரவெல்லாம் நூறாயிரம் பிசாசுகள் அலைக்கழித்தன. பத்து நாட்கள் முன் நாராயண் ஹிதி அரண்மனையில் புகுந்த ஏதோ ஒரு அசுரன் கிளப்பிவிட்ட பிசாசுகள். விஷ்ணுவின் அவதாரங்கள் என்று நம்பப்பட்டவர்கள் அசுரர்களான விசித்திரம். ஏதேனும் நம்பும்படி இருக்கிறதோ? பெற்றவர்களையே மகன் கொல்வதைக் கேள்விப் பட்டதுண்டா? கலி முற்றிவிட்டதோ, சதி முடித்ததோ - ஹே, பசுபதிநாத் - இதற்கெல்லாம் நான் ஏன் தண்டிக்கப்பட வேண்டும்?

அநாதைப் பிணம் - ஐயோ, அப்படியா சொன்னேன்? சரஸ்வதி, என் மகள் ஐயா, எப்படி மறந்தேன்? மணமாகி வேறு வீட்டுக்குப் போய்விட்டவளிடம் எப்படி சொந்தம் கொண்டாடுவது? ஆண் பிள்ளை இருந்திருந்தால் கதையே வேறு. இன்று இப்படி மன்னரின் பேயாய் காட்டுக்குத் தள்ள அனுமதித்திருப்பானா? துர்கா பிரசாத் அறையில் யாருமில்லை என்கிற தெம்பில் பிரலாபத்துடன் தேம்பித் தேம்பி அழுதார்.

யாரோ கதவைத் தட்டினார்கள். அவர் கட்டிலில் இருந்தபடியே 'யாரது?' என்றார். ''படுத்துத் தூங்குங்கள் தாத்தா. நாளைக்கு வெகு தூரப் பயணம் காத்திருக்கு'' என்றான் காவல்காரன் ஜன்னல் வழியாக. அவர் கண்ணை மூடிக் கொண்டார். தூக்கமும் விழிப்புமாகக் கழிந்த இரவில் என்னென்னவோ சித்திரங்கள் நிழலாடின. நேபாளத்தின் தென்கோடி. இந்திய எல்லையைக் கிட்டத்தட்டத் தொடும் புட்டுவால் நகரத்தின் புழுதி மிக்க வறண்ட சாலையின் இரு மருங்கிலும் காலையிலிருந்து மக்கள் காத்திருக்கிறார்கள். நான்கு வயது சிறுவனாக துர்கா. தாயின் விரல்களைப் பிடித்தபடி நிற்கிறான். பசியும் சோர்வுமாக அவன் அழுகையில், அம்மா சமாதானப் படுத்துகிறாள். ''அழாதே. இதோ ராஜா வரப் போகிறார். தெய்வத்தைப் பார்க் கணும்னா கஷ்டப்படத்தான் வேணும் குழந்தே.'' ராஜா அன்று வரவே

யில்லை. அவருக்காகக் காத்திருந்த காய்ந்த வயிறுகளைப் பற்றி அவருக்குத் தெரியாது. கண் திறக்காத தெய்வத்துக்கு பக்தர்கள் கண்ணில் படாத மாதிரி. ஏதோ ஒரு குருட்டு அதிர்ஷ்டத்தால் வடக்கே காட்மாண்டுவுக்குப் போனதும் பட்டினியில் வாடும் பிராமணன் என்ற ஒரே தகுதியால் அரண்மனைப் புரோகிதர் கும்பலில் சேர்த்ததும் பசுபதிநாதரின் வேலையாக இருக்க வேண்டும்.

ஆனால் அரண்மனை வளாகம் ஒரு மூடுமந்திரம். உள்ளே என்ன நடக்கிறது என்று யாருக்கும் தெரியாது. தெரியாமல் இருந்த வரை க்ஷேமம் என்று இப்போது துர்கா பிரசாதுக்குத் தோன்றிற்று. திடீரென்று திரை கிழிந்தாற்போல் தேசம் மிரண்டு நிற்கிறது. கனவிலிருந்து உலுக்கப்பட்டவர்களாய் இளைஞர்கள் நடுத்தெருவில் நின்று கோஷமெழுப்புகிறார்கள். அவருக்கு ஒரு பேரன் இருந்திருந்தால் அவனும் கிளம்பியிருப்பான். நெற்றியில் ஒரு கருப்புப் பட்டையைச் சுற்றிக் கொண்டு வீராவேசமாகக் கோஷமிடும் ஒரு இளைஞன் அவர் மனக்கண்ணில் தோன்றினான். நமக்குத்தான் இல்லை, சரஸ்வதிக்காவது ஒரு மகன் பிறந்திருக்கக் கூடாதா? அவள் பிறக்கும்போது அவருக்கு 48 வயது. சென்ற மாதம் கூட வந்து அழுதாள். ''மாமியாரும் புருஷனும் பிள்ளை பெத்துக்கல்லேன்னு திட்டாத நேரமில்லை, ஏதோ ராஜ பரம்பரைக்கு வாரிசு கொறஞ்ச மாதிரி. செத்துறலாம் போலிருக்கு.''

துர்கா பிரசாதுக்கு சிரிப்பு வந்தது. இனிமே ராஜ பரம்பரையும் ஆண் வாரிசு கேக்காது. போய் சொல்லு உன் முட்டாள் மாமியாருக்கு....

விடியும் நேரத்தில் அயர்ந்து போன வேளையில் கதவைத் தட்டி எழுப்பினார்கள். அலறி அடித்துக்கொண்டு எழுந்தபோது விவரம் புரிய சற்றுநேரம் பிடித்தது. இன்று மன்னர் இறந்த 10வது நாள். நான் மன்னரின் ஆவி, திரும்பி வர முடியாத யாத்திரைக்குத் தாயராகிறேன். சட்டென்று சரஸ்வதியின் நினைவு வந்தது. விஷயம் தெரிந்தால்

துடித்துப் போகமாட்டாளா? அவள் துடித்துக் கதறும்போது யாருக்காவது மனசு இளகலாம். வேறு யாரையாவது ஆவியாக அனுப்பலாம்.

அரண்மனைப் புரோகிதர்கள் ஏக அவசரத்தில் இருந்தார்கள். சரஸ்வதியின் பெயரை அவர் உச்சரிக்கும் போதெல்லாம் அவர்கள் அது காதில் விழாத மோனத்துடன் அவர்களுடைய பணிகளை கவனித்தார்கள். பன்னீர் தெளித்த நீரில் குளியல். ராஜாவின் சரிகை அங்கி அவரது எலும்பும் தோலுமான உடம்பில், கொக்கியில் மாட்டியது போல் நின்றது. கால்களில் ஜோடுகள், கண்ணில் கருப்புக் கண்ணாடி சகிதமாக நின்றபோது இரண்டு புரோகிதர்கள் உணர்ச்சி வசப்பட்டு காலில் விழுந்து நமஸ்கரித்தார்கள். காலையில் அவருக் கென்று பிரத்யேகமாக தேநீரில் என்ன கலந்து கொடுத்தார்கள் என்று தெரியவில்லை. ஏலத்தின் வாசனை ஜமாய்த்தது. இப்போது தலையை கிறுகிறுத்துக்கொண்டு வந்தது. பொம்மை நகர்வது போல மற்றவர் களுடன் சென்றபோது பாகமதி நதிக்கரையும் பசுபதிநாதர் ஆலயமும் தெரிந்தன. அரச பரம்பரைக்கு அந்திமக் கிரியைகள் செய்யும் இடம் - 'கல் மோச்சன் காட்' அது என்று புரிந்தது. மக்கள் கூட்டம் அலைமோதிற்று. துர்கா பிரசாதுக்கு என்னவோ செய்தது. அவரை ஒரு பீடத்தில் அமர்த்தினார்கள். எதிரில் தாம்பாளம் தாம்பாளமாக உணவு வகைகள். அவர் இதுவரை சாப்பிட்டிராத அசைவ வகை எண்பத்திநாலு. எல்லாவற்றையும் அவர் சாப்பிட்டாக வேண்டும். ருசியாவது பார்க்கவேண்டும். செத்துப் போன ராஜாவுக்குப் பிடித்தமானவை.

'இதற்குத்தான் அலைகிறதா உங்கள் ஆவி' என்றார் துர்கா பிரசாத் பலக்க. பிறகு அவசர அவசரமாக சிலவற்றை வாயில் திணித்துக் கொண்டார். போட்ட வேகத்தில் எல்லாம் வெளியில் வந்தது. புராகிதர்கள் பெரிய குரலில் மந்திரம் சொல்லி மக்களின் கவனத்தைத் திசைதிருப்பினார்கள். அவர்கள் கவனத்தைத் கவர வேறு

ஒன்றும் இருந்தது. மன்னரின் யானை வந்துகொண்டிருந்தது. காட்டில் துர்கா பிரசாதுக்கு வேண்டிய மெத்தை, நாற்காலி, உடைகள் எல்லாம் சுமந்துகொண்டு. துர்கா பிரசாதுக்கு மறுபடி உடம்பு வெலவெலத்தது. சரஸ்வதிக்குச் சொல்லி அனுப்பியிருக்க மாட்டார்கள் இந்தக் கிராத கர்கள். அவள் இங்கு வந்து என்நிலையைக் கண்டிருந்தால் அழுதிருப் பாள். 75 வயதுக் கிழவர் காட்டில் என்ன செய்வார் தனியாக? விலங்கு களுக்குத் தீனியாக அனுப்புகிறீர்களா? கொலைப் பட்டியலில் இவர் பெயரையும் எழுதுங்கள்.

கப்சிப்பென்று நிற்கிறது கூட்டம். அவருடைய வேஷத்தை அங்கீகரிப்பது போல. அவருக்கு வேகவேகமாக உபச்சாரங்கள் ஓதப்படுகின்றன. கூடவே மெல்லிய குரலில் கட்டளைகள், 'யானை மேல் ஏறிய பிறகு ஊர்ப் பக்கம் தலையைத் திருப்பிப் பார்க்கக்கூடாது. யானை பாகமதியைக் கடந்து காட்டுக்குள் செல்லும். காட்டில் உயிர் வாழத்தேவையான சாப்பாடு உங்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கு. யானையும் பாகனும் உதவியாளனும் திரும்பிவிடுவார்கள். எக்காரணம் கொண்டு காட்டிலிருந்து தப்பிக்க நீங்கள் முயற்சி செய்யக் கூடாது.'

அவருக்கு அவர்கள் பேச்சு காதில் விழவில்லை. கண்கள் சரஸ்வதியைத் தேடிக் கொண்டிருந்தன. அவளுக்கிருந்த ஒரு ஆதரவும் போச்சு என்று தெரிந்தால் எப்படித் தவிப்பாள்? தனக்கு ஏற்படும் ஏமாற்றத்திற்கு அவளுடைய தவிப்பைப் பற்றின கவலை காரணமில்லை என்ற நினைப்பு அவருக்கு துக்கத்தை ஏற்படுத்திற்று. ராஜாவின் ஆவி என்று சொன்னார்களே தவிர யானை மேல் முரட்டுத்தனமாக ஏற்றி உட்கார்த்தினார்கள். முழங்கால்களில் சுரீரென்று வலித்தது. யானை மெல்லக் கிளம்பி பாகமதியைக் கடக்க ஆரம்பித்தபோது மக்கள் ஆரவாரமெல்லாம் ஓய்ந்து போயிருந்தது.

''காட்டுக்குள் எங்கே விடப் போகிறீர்கள்?'' என்றார் அவர் பீதியுடன்.

பாகனும் கூட வந்தவனும் சிரித்தார்கள். ''நீங்க தப்பிக்க முடியாத தொலைவிலே விட்டுடுவம். கவலைப்படாதீங்க'' என்றான் பாகன்.

''அதான் பணமும் கட்டிலும் மெத்தையும் சாப்பாடும் கொடுத்திருக்காங்களே, சுகமா இருங்க'' என்றான் மற்றவன். ''கிளம் பினதே லேட்டு'' என்று பாகன் அலுத்துக் கொண்டான். ''அந்தப் பொம்பளை மட்டும் குறுக்கே வந்து விழலேன்னா இன்னேரம் கிழவரை இறக்கிவிட்டுத் திரும்பியிருக்கலாம்.''

''என்ன அச்சு?'' என்றார் துர்கா பிரசாத்.

''ஒரு அசட்டுப் பொம்பிளை, யானை வயிற்றுக்கு அடியிலே குறுக்கே வந்து வெளியேறப் பாத்துது. அப்படி வந்தா ஆண் குழந்தை பிறக்கும்னு அவ மாமியாக்காரி அனுப்பினாளாம்.''

''ஐயோ, அப்புறம்?''

''அப்புறம் என்ன. யானை சும்மா இருக்குமா? ஒரே மிதி!''

துர்கா பிரசாத் ஆவேசம் வந்தது போல பாகன் தோளைப் பிடித்து உலுக்கினார்.

''அந்தப் பொண்ணு பேரென்ன?''

பாகன் திடுக்கிட்டுத் திரும்பினான்.

''ஐயா பெரியவரே! என்னயெல்லாம் தொடாதீங்க. பிறகு அபச்சாரம் ஆச்சுன்னு ஊர்லே சொல்வாங்க. இனிமே எதுக்கு உங்களுக்கு இந்தக் கவலையெல்லாம். வாயை மூடிக்கிட்டு வாங்க. எங்க வேலையை நாங்க முடிச்சிட்டுப் போகலேன்னா எங்க தலையை சீவிடுவாங்க.''

''ஏ.கே.47லே சுட்டுடுவாங்கன்னு சொல்லு!'' என்றான் மற்றவன் ''இது நவயுக ராஜாக்கள் காலம்.''

துர்க்கா பிரசாதுக்குப் படபடத்துக் கொண்டு வந்தது. அது சரஸ்வதியாக இருக்குமா? தன்னைப் பார்க்காமலே அப்படிச் செய்யத் துணிந்திருப்பாளா? சரஸ்வதியாக இருக்க முடியாது. சரஸ்வதியைப் போல யாரோ. படிப்பறிவில்லாத யாரோ பெற்ற ஒரு முட்டாள் பெண். நேபாளத்துப் பிரஜை.

இந்தப்பிள்ளை என்ன சொன்னான்?

''நவயுக ராஜாக்கள் காலம்.'' அந்த ராஜாக்களுடைய ஆவிகள்தான் காட்டுக்கு விரட்டப்படுகின்றன.

பாகமதி நதியைக் கடந்து யானை காட்டுக்குள் நுழைந்தது. இருட்டிவிட்டது என்று பாகன் மீண்டும் முணு முணுத்தான். ''எத்தனை தூரம் போகப் போகிறோம்?'' என்றான் மற்றவன், துர்கா பிரசாத் அமர்ந்திருக்கும் நினைவு இல்லாதவன் போல.

''அவங்க சொன்ன தொலைவுக்குப் போக முடியாது. கொஞ்ச தூரம் போய் இறக்கிடலாம். எழுபத்தி ஐந்து வயசுக்கிழம் எப்படியும் தப்பிச்சுத் திரும்ப முடியாது.''

துர்கா பிரசாதுக்கு திடீரென்று ஒரு அசாதாரண அமைதி ஏற்பட்டது. ஒரு சவத்தின் நிலை இப்படித்தான் இருக்க வேண்டும் என்று தோன்றிற்று. ஆனால் மீண்டும் மனசு குரங்காட்டம் ஆடியது. வராத ராஜாவைத் தரிசிப்பதற்காக தெருவில் காத்து கருகி நின்றது சம்பந்தமில்லாமல் நினைவுக்கு வந்தது. ஒரு நாள் கூலிப் பணம் போனதால் பட்டினியோடு படுத்தது நினைவுக்கு வந்தது. ராஜ தரிசனத்துக்காக இப்படிப்பட்ட தியாகம் செய்வது ஒன்றும் தப்பில்லை என்றாள் அம்மா பெருந்தன்மையாக - தரிசனமே கிடைக்கவில்லை

என்பதை மறந்து. அம்மா இப்போது இருந்தால் ராஜாவுக்காக ஆன்மாவைத் தொலைப்பதும் தப்பில்லை என்று சொல்லியிருப்பாள், காலம் மாறவேயில்லை என்ற சமாதானத்துடன்.

காட்டுக்குள் சற்று தூரம் சென்றதும் துர்கா பிரசாதுக்கு மூச்சுத் திணறிற்று. தொலைந்து போன ஆன்மாக்கள் எல்லாம் அவரைச் சூழ்ந்துகொள்வது போலிருந்தது.

''இப்ப இறங்கணும் பெரியவரே!'' என்றான் பாகன். யானை முன்னங்காலை மண்டியிட்டு அமர்ந்தபோது துர்கா பிரசாதுக்கு நிலைகுலைந்து போயிற்று. தட்டுத் தடுமாறி கீழே இறங்கினார். உதவியாளன் சாமான்களையெல்லாம் ஒரு இருண்ட மரத்தடியில் இறக்கி வைத்தான். வெளிச்சத்துக்கு ஒரு டார்ச் விளக்கு வைக்கப் பட்டது.

''நாங்க கிளம்பணும்'' என்றான் பாகன் பொதுவாக. யானை மந்திரம் போட்டது போல எழுந்தது. பாகனும் மற்றவனும் யானை மேல் அமர்ந்துவிட்டதை அவர் கவனித்தார்.

''பெரியவரே, இனிமே நீங்க இங்கே தான் இருக்கணும். தப்பிச்சுப் போக முயற்சி பண்ணாதீங்க'' என்றான் பாகன். ''ராஜாவுடைய ஆன்மாவுக்கு கதிமோட்சம் கிடைக்காது!''

''வா வா. என்ன கிண்டலா பண்றே. பாவம். வர்றோம் தாத்தா. டார்ச்சை ரொம்ப நேரம் போடாதீங்க. பாட்டரி செத்துடும்'' என்றான் மற்றவன்.

துர்கா பிரசாத் டார்ச் விளக்கை அணைத்தார்.

யானை நகர ஆரம்பிக்கும் சமயத்தில் துர்கா பிரசாத் அதன் கால்களிடையே நகர்ந்தார். மிரண்ட யானை தடுமாறி, பாதையில்

*சிக்கிக் கொண்ட உடம்பை மிதித்தது. துர்கா பிரசாதின் குரல் ஓசைப்படாமல் அமுங்கிற்று.*

*''யானை மிரளுதா?'' என்றான் உதவியாளன்.*

*''ஏதாவது தடுக்கியிருக்கும்'' என்றான் பாகன். ''அந்தக் கிழம் அதுக்குள்ள விளக்கை அணைச்சுட்டது.''*

*சற்று பொறுத்து ''கூடவே யாரோ வர்ற மாதிரி இல்லே?'' என்றான் பீதியுடன்.*

*சுற்றுமுற்றும் பார்த்த மற்றவன், ''நமக்கு பிரமை'' என்றான் நிச்சயமில்லாமல்.*

இந்தியாடுடே 2001

